Registered No. M. 2330 'SIDDHANTHAM'
Vol. 33—No. 8


# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 33 | சார்வரி ஆவணி 1960 ஆகஸ்ட் | இதழ் 8

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா

## செய்திச் சுருக்கங்கள்

**பெரியபுராண விரிவுரைகள் :** நமது சமாஜச் சார்பி லும், இராயப்பேட்டை ஸ்ரீ. பாலசுப்பிரமணிய பக்தஜன சபை திருவல்லிக்கேணி இளைஞர் கலாச்சாரக் கழகம் ஆகியவற்றின் சார்பிலும், "சைவ நெறிக் காவலர்" டாக்டர் - திரு. மா. இராசமாணிக்கனார், எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பிஎச்.டி. அவர்களால் பெரியபுராண விரிவுரை கள் 15, 16, 17–7–60 ஆகிய மூன்று நாட்களிலும், இராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார் பி.ஏ. அவர்கள் தலைமையில் திருவல்லிக்கேணி இந்து உயர்நிலைப் பள்ளியில், பெருஞ் சிறப்புடன் இனிது நிகழ்ந்தன. தமிழறிஞர்களும் அன்பர்களும் திரளாக மூன்று நாட்களும் வந்திருந்து கேட்டு மகிழ்ந்தனர். 'டாக்டர்' அவர்கள் மூன்று நாட் களிலும் வரலாறு - இலக்கியம் - சேக்கிழாரின் பாநலம் - பல்கலைப் புலமை முதலிய பலப்பல அரிய பொருள்களை விளக்கித் தமது நுண்மாண் நுழைபுலம் தோன்றச் சொற் பொழிவாற்றி அனைவரையும் மகிழ்வித்தார்கள். வந்திருந்து கேட்ட அன்பர்கள் அனைவருக்கும் பெரியபுராணத்தில் ஒரு புதிய ஆர்வமும் பற்றும் உண்டாகும்படி, விரிவுரைகள் அமைந்திருந்தன. மூன்றும் நாள் தலைவர் திரு நல். முருகேச முதலியார் அவர்களின் முடிவுரைக்குப் பின்னர்ச் சமாஜச் சார்பில் திரு. புலவர் முருகவேள் அவர்கள், அரிய ஆராய்ச்சி விரிவுரைகளை நிகழ்த்திய 'டாக்டர்' அவர்களுக் கும், வந்திருந்து கேட்டுச் சிறப்பித்த அறிஞர்கள் எல் லோருக்கும் நன்றியுரை நவின்றார்கள்.

**மணிவிழா :** சைவ சித்தாந்த சரபம், சிவாகம ஞான பானு, மகாமகோபாத்யாயர், பழநி சிவத்திரு. ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் அவர்களின் 60-ஆம் ஆண்டு நிறைவு விழா, 15–7–1960 வெள்ளிக்கிழமையன்று நாகர்கோயில் நன்னெறி மன்றச் சார்பில் மிகவும் சிறப்புறக் கொண்டா டப்பெற்றது. பண்டித திரு. அ. சிவசுப்பிரமணிய பிள்ளை அவர்கள், சிவத்திரு. ஈசான சிவாச்சாரிய சுவாமிகளுக்கு "வாழ்த்திதழ்" ஒன்று வாசித்துக் கொடுத்தார்கள்.

**பாராட்டு விழா :** திருவண்ணாமலை ஆதீனம் அருள் நெறித் தந்தை தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர் களால் "சித்தாந்த சைவமணி" என்னும் பட்டம் வழங்கிப் பொன்னாடை போர்த்தப் பெற்ற குடந்தை வித்துவான் திரு. சுவர்ணகாளீச்சுரன் அவர்கட்கு, திருவையாறு அப்பர் திருச்சபையின் சார்பில், ஒரு பாராட்டுக் கூட்டம் சிறப்புற நடத்தப்பெற்றது. திருவையாறு ஊராட்சி மன்றத் தலைவர்

Reg. M. 2330




உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

மலர் 33 | சார்வரி ஆவணி 1960 ஆகஸ்டு | இதழ் 8

## மூல இலக்கியம்*

[முருகவேள்]

### முன்னுரை : இலக்கியமும் நாடும்

ஒரு நாட்டின் நாகரிகச் சிறப்பினை விளக்குவனவற்றுள், அந்நாட்டிற்குரிய இலக்கியங்கள் தலைசிறந்தனவாகும். நாட்டு மக்களின் வாழ்க்கை நல்ல நிலையிற் செழித்தோங்கி யிருந்தால், அதுபோது தோன்றும் இலக்கியங்களும் செழித்துச் சிறந்தோங்கி விளங்கும். நாட்டு மக்களின் வாழ்க்கை நலி வுற்றுச் சிதைந்து சீரழிந்து போயிருந்தால், அப்போது தோன்றும் இலக்கியங்களும் தரங்குன்றித் தாழ்ந்திழிந்து நிற்கும். இலக்கியங்கள் வளர்ந்தால் நாடும் வளரும்! இலக் கியங்கள் இழிநிலை எய்தினுல் நாடும் இழிநிலை எய்தும்! நாட்டு மக்களின் தாழ்வும் தளர்ச்சியும் போக்கி, நலம்பல பெருக்கிச் செழிப்பும் சிறப்புமுறச் செய்ய வல்லவை, சீரிய இலக்கியங்களே யாகும்.

### இலக்கியம் பற்றிய விளக்கம்

தேயம் இடையிட்டவற்றையும் காலம் இடையிட்டவற் றையும் நம்மனோர்க்குக் காட்டி யுணர்த்துதல் பற்றி, இலக் கியங்களைக் "கண்கள்" என்று திருவள்ளுவர் புகழ்ந்து

*தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபையின் 76-ஆம் ஆண்டு நிறைவு விழாவில் பேசியதனைத் தழுவியது (21—5—60.)

போற்றுகின்றார். இலக்கியங்களை 'எக்காலத்துக்கும் உரிய நூல்கள்' என்னும் பொருளில் "இலங்கு நூல்" எனத் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். நாம் இந்நாளில் 'Classics' என்பனவற்றையே 'இலங்கு நூல்' எனத் திருவள்ளுவர் குறித்தனர் போலும்! இலக்கியங்களைக் கல்லாதவர்களின் இழிவினை "விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல் கற்றாரோ டேனையவர்" என அவர் இகழ்ந்துரைத்தல் காணலாம். இலக்கியங்களின் சுவை பெருகிப் பயன்விளைக்கும் பண்பு இத்தகைய தென்பதனை "நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு" என்பதனால் அவர் விளக்கியருளி யிருத்தல் அறிந்தின்புறற்பாலது.

"இவ்வுருவு நெஞ்சென்னும் கிழியின்மேல் இருந்து இலக்கித்து
அவ்வுருவு நினைப்பென்னும் துகிலிகையால் வருத்தித்துக்
கவ்வியதன் நோக்கினாற் கண்விடுத்துக் காதல்நீர்
செவ்விதில் தெளித்தானைக் காமப்பூச் சிதறினான்"

எனவரும் சீவகசிந்தாமணிச் செய்யுளில் 'இலக்கித்து' என்னும் சொல் 'எழுதி' என்னும் பொருளில் ஆளப்பெற்றிருத்தலால், 'இலக்கியம்' என்னும் சொற்பொருள் இனிது தெளியப்படும். இலக்கியங்கள் எல்லாரையும் எல்லாக் காலத்திலும் இன்புறுத்தும் தகைமை வாய்ந்தன. அவை 'காலத்தால் வாடி வதங்குவதில்லை'; 'அவற்றின் அளவிலா நலங்கள் பலகால் பயிலுதலால் சுவை குன்றித் தெவிட்டுவதில்லை'. ("Age cannot wither them, nor custom stale their infinite variety.")

## இருண்ட கால நிலைகள்

தமிழகத்தின் பொற்காலம் எனத் தகுந்த சங்ககாலத்திற்குப் பிறகு, தமிழக வரலாற்றில் ஓர் 'இருண்ட காலம்' நிலவியது. அவ்விருண்ட காலத்தில் நாட்டின் நிலைமையும் பல்லாற்றான் நலிவுற்றுக் கிடந்ததனால், நல்ல இலக்கியம் எதுவும் அதுபோது தோன்றாதொழிந்தது. அவ் விருண்ட காலத்தில் சேர சோழ பாண்டியர்களாகிய தமிழ் மூவேந்தர்களின் ஆட்சி வலிகுன்றிச் சீரழிந்திருந்தது. வேற்றரசர்கள்

தமிழகத்திற் புகுந்து ஆட்சி செலுத்தத் தலைப்பட்டனர். வேற்று நாட்டவரின் கொள்கைகளும் பழக்க வழக்க ஒழுக்கங்களும் தமிழ்நாட்டில் தடையின்றிப் புகுந்து பரவலாயின. வேற்று மொழிகள் பல தமிழ்நாட்டிற் புதிது புகுந்து வழங்கத் தொடங்கி, அரசியல் மொழிகளாகவும் நிலைபெற முற்பட்டன. பழந்தமிழ்ச் சங்கமும், அச்சங்கத் தமிழ்நூல்களும் அழிந்து மறையத் தொடங்கின. வேற்று நாட்டவர் வேற்றுக் கொள்கையாளர்களுக்குத் தமிழகத்தில் ஏற்பட்ட ஆட்சியுரிமை வலிமையால், தமிழ்நாடு மிகவும் தளர்வுற்றுத் தமிழ் மக்களும் நிலைகுலையலாயினர். சங்ககால வாழ்க்கை வான் முறைகளும் பழக்க வழக்கப் பண்பாடுகளும் போற்றுவாரின்றி அழியத் தலைப்பட்டன. இசைத்தமிழும் நாடகத்தமிழும் பிற பல கலைகளும் அழியவிடப் பெற்றன. வேற்றவர் ஆட்சியும் தலைமையும் தமிழ் நாட்டிற் புகுந்ததனால், தமிழ் மக்கள் அடிமை மனப்பான்மை எய்திப் பழம்பெருஞ் சிறப்புக்களை இழந்து, மொழிப்பற்றும் கலையுணர்வும் குன்றி, அறிவு நலம் சாம்பி இழிதகவுற்றுக் கிடந்தனர். பழம் பெருந் தமிழ்ச் சமயங்களாகிய சிவநெறியும் திருமால் நெறியும் பொலிவிழந்து மங்கிக் கிடப்ப, ஒன்றுக்கொன்று முரண்பாடுடையனவும், ஒன்றோடொன்று பெரும்பகைகொண்டு, ஒன்றையொன்று அழித்தொழித்தற்கு அற்றம் நோக்கியிருந்தனவுமாகிய பல புதுப்புதுக் கொள்கைகள், தமிழகத்திற் புகுந்து நுழைந்து வேரூன்றிப் பரவிச் செல்வாக்குப் பெற முயன்றன.

### சமய ஆசிரியர் செயல்கள்

இவ்விருண்ட காலத்திற்குப் பின்னர்க் கி. பி. 6-7 ஆம் நூற்றாண்டுகளில் பல்லவப் பேரரசு தலையெடுத்து வளர முற்பட்டது. அப் பல்லவப் பேரரசின் காலத்தில் தான், நமது சைவ சமய ஆசிரியர்களாகிய திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் தோன்றி வாழ்ந்து விளங்கினார்கள். அவ்விரு பெருமக்களும் நமக்குக் காலத்தினாற் செய்த நன்றியின் அருமை பெருமைகளை, அவர்கள் காலத்துத் தென்னிந்தியாவின் அரசியல் பொருளியல் சமய சமூகவியல் வரலாறுகளை

யெல்லாம் நன்கினிது ஆராய்ந்தறியினன்றி, ஒரு சிறிதும் உணர்தல் இயலாது. புதுமை புரட்சி சீர்திருத்தம் மறுமலர்ச்சி என்பன போலும் பல சொற்கள் சொற்றொடர்களை, இன்று நாம் பலகாலும் பலரும் முழங்கக் கேட்கின்றோம். இவை தம்மையெல்லாம் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னரே நமது சமய ஆசிரியர்கள் நிகழ்த்திக் காட்டி யிருப்பதனை நம்மிற் பலர் அறிவதில்லை. திருநாவுக்கரசர் திருஞான சம்பந்தர் முதலிய நமது சமய ஆசிரியர்கள் தமது காலத்தில் தமிழ் நாட்டில் பல பெரும் புரட்சிகளைச் செய்தனர்; புதுமைகளை வகுத்தனர்; சீர்திருத்தங்களை நிகழ்த்தினர்; மறுமலர்ச்சிகளை விளைத்தனர்!

"பாடிய செந்தமி ழாற்பழங் காசு பரிசில்பெற்ற
நீடிய சீர்த்திரு ஞானசம் பந்தன் நிறைபுகழான்
நேடிய பூந்திருநாவுக் கரசோ டெழில்மிழலைக்
கூடிய கூட்டத்தி னல்உள தாய்த்திக் குவலயமே"

## இலக்கியத்திற் புதுமையும் புரட்சியும்

நம் சமய ஆசிரியர்கள் பலவகைப் புதுமை புரட்சி சீர்திருத்தம் மறுமலர்ச்சிகளை நிகழ்த்தியமைக்கு உறுபெருஞ் சான்றுகளாக அவர்தம் பாடல்களே அமைந்துள்ளன. இலக்கியங்களின் அமைப்பிலும் போக்கிலும் கருத்திலும் புரட்சி நிகழ்ந்தால், அவை நாட்டின் நிலையிலும் பெரியதொரு புரட்சியை விளைவிக்கும். நாட்டில் ஏதேனும் புரட்சி நிகழுமாயின், அதன் அறிகுறிகளும் விளைவுகளும் இலக்கியங்களிற் பதிந்து இடம் பெறும். இவ்வுண்மைக்கு நமது சைவத் திருமுறை இலக்கியங்கள் சான்று பகர்ந்து நிற்கும் தன்மையனவாதல் காணலாம். சங்ககால இலக்கியங்களுக்கும், அவற்றிற்குப் பின்னர் அவற்றின் அடிப்படையில் எழுந்த திருமுறை இலக்கியங்களுக்கும் இடையே, அமைப்பிலும் போக்கிலும் கருத்திலும் சிற்சில வேறுபாடுகள் உண்டு. பிற துறைகளில் மட்டுமன்றி, மொழித்துறை இலக்கியத்துறை கவிதைத் துறை முதலியவற்றிலும் கூட, ஒரு புது நெறியையும் மறுமலர்ச்சியையும் புரட்சியையும் நமது சமய ஆசிரியர்கள் நிகழ்த்தியுள்ள திறனைச் சங்ககாலத்திற்குப் பின்னர் எழுந்த தமிழ்

இலக்கியங்களின் போக்கினாலும் அமைப்பினாலும் நம்மனோர் நன்கினிது அறியலாம்.

இருண்ட காலத்திற் செயலிழந்து, இழிநிலையடைந்து உணர்ச்சியற்றுக் கிடந்த தமிழ் மக்களை "நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பி"த் திருஞானசம்பந்தர் தட்டி எழுப்பினார். தமிழ் - தமிழன் என்னும் உணர்ச்சிகளை முதன் முதல் நாட்டிற் பொங்கியெழுந்து கிளர்ந்தோங்கச் செய்தவர்கள் நம் சமய ஆசிரியர்களே. வேறு பிற எந்த ஆசிரியரும் தமிழோடியைத்துத் தம்மைச் சுட்டிக் கொள்ளாத நிலையில், முதன் முதல் தம்மைத் "தமிழ்ஞான சம்பந்தன்" எனப் பெருமிதத்துடன் குறிப்பிட்டுக் கொண்டவர் திருஞானசம்பந்தப் பெருமானேயாவர். நாட்டின் மூலை முடுக்கர் எங்கணும் சென்று, அக்காலத்தில் நிலவிய தவறான கொள்கைகளைக் கடிந்து, தமது கொள்கைகளைத் திறம்படவும் ஆற்றலோடும் பல்லாயிரக்கணக்கான மக்கள் மனங்கவரும் அழகிய வழிகளிலெல்லாம் பரப்பி வளர்த்த திருஞானசம்பந்தரின் செயலாண்மைத் திறம் பெரிதும் வியக்கற்பாலது! திருஞானசம்பந்தரின் அரும் பெருஞ் சிறப்புக்களை உணர்தற்குரிய வாயில்களுள்,

"புமியதனிற் ப்ரபுவான
புகலியில்வித் தகர்போல
அமிர்தகவித் தொடைபாட
அடிமைதனக் கருள்வாயே"

என 'வாக்கிற் சிறந்த அருணகிரிநாதரே' வியந்து புகழ்ந்து விரும்பும் வகையில், அப்பெருமானார் வெவ்வேறு வகையில் வெவ்வேறு நடைகளில் புதிய புதியவாகப் பாடிய பாடல் வகைகளை ஆராய்ந்துணர்வதும் ஒன்றாகலின், அவற்றுள் ஒரு சில முதன்மையானவற்றை மட்டும் 'தாலிபுலாகநயம்' பற்றி, இயன்ற பெற்றி ஈண்டுச் சுருக்கமாகக் கண்டமைவோம் :—

1. மொழிமாற்று: 'கலையை மறைத்து வைத்துப் புலப்படுத்துதலிலேயே கலையுள்ளது' ("Art lies in concealing art") என்னும் உண்மைக்கு ஏற்ப, மொழி

களை மாற்றியமைத்து மயக்கம் விளைத்துப் பின்னர் வியப்மை யளிக்கும் ஒருவகைப் பாடலே மொழிமாற்று எனப்படும்.

"காட தணிகலம் காரரவம் பதி காலதனில்
தோட தணிகுவர் சுந்தரக் காதினில் தூச்சிலம்பர்
வேட தணிவர் விசயற் குருவம் வில்லுங் கொடுப்பர்
பீட தணிமணி மாடப் பிரமபுரத் தாரே"

எனவரும் திருப்பதிகம் மொழிமாற்று எனப்படும். இதன் கண், "காடது பதி, காரரவம் அணிகலம், காலதனில் தூச் சிலம்பர், சுந்தரக் காதினில் தோடது அணிகுவர்..." என மொழிகளை மாற்றிப் பொருள்கொள்ள வேண்டியிருத்தலால், இது மொழிமாற்று எனப்படுவதாயிற்று.

2. மாலைமாற்று: ஒரு செய்யுளை ஈறு முதலாகுமாறு ஓதினும் பொருள் பயந்து நிற்கும் சிறப்புடையது. இதனை ஆங்கிலத்தில் Palindrome என்பர்.

"யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா"

3. யமகம்: இது வடமொழிப் பெயர். தமிழில் இதனை 'மடக்கு' என்பர். ஒரு செய்யுளில் ஒருகாற் பயின்ற சொல்லே மீண்டும் பலகால் மடக்கி வருதலால் 'மடக்கு' என வழங்கும். இங்ஙனம் சொற்கள் செய்யுட்களில் மடக்கிவரும் முறைகள் 315 வகைப்படும் என்பர்.

"உற்றுமை சேர்வது மெய்யினையே
உணர்வது நின்னருள் மெய்யினையே..."

"ஆலநீழல் உகந்த திருக்கையே
ஆனபாடல் உகந்த திருக்கையே..."

4. ஏகபாதம்: ஒரு பாடலில் ஓரடியே மாறாமல் ஏனைய மூன்றடிகளாகவும் வந்து வெவ்வேறு வகையிற் பொருள் அமைந்து நிற்பது. அடிதோறும் எல்லாச் சீர்களும் மீண்டும் மடக்கி வரும் யமகமே 'ஏகபாதம்' எனப்படும்.

"பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்"

**5.** இருக்குக் குறள் : இரு சீரால் இயன்ற அடிகளையுடைய பாடல். வெண்பா வினத்தில் 'குறள்' என்பதொரு வகை இரண்டடிகளான் இயன்று வருவதுண்டாகலின், அதனினின்று இதனைப் பிரித்துக் காட்டுதற்கு, இஃது "இருக்குக் குறள்" எனப் பெயர் பெறுவதாயிற்று. "இருக்கு" என்பது வடமொழியில் ஒருவகைச் செய்யுள் அமைப்புக்குப் பெயர். அதனால் அமைந்தமை பற்றியே "இருக்கு வேதம்" எனப் பெயர் வந்தது என்பர். இதனை, ஆசிரியர் சேக்கிழார் "தமிழ் இருக்குக் குறள்" எனச் சிறப்பிப்பார்.

" வாசி தீரவே
காசு நல்குவீர்
மாசின் மிழலையீர்
ஏசல் இல்லையே"

என்பன போன்று வரும் பல திருப்பதிகங்கள் "திரு இருக்குக் குறள்" எனப் பெயர் பெற்று வழங்கும்.

**6.** எழு கூற்றிருக்கை : ஏழு கூறுகளால் தேர்போல அமைத்து, ஒன்றுமுதல் ஏழுவரை ஒவ்வோர் எண் மிகுத்தும் குறைத்தும், எண்ணலங்காரம் அமைய இணைக்குறள் ஆசிரியப் பாவாற் பாடப் பெறுவது. திருமங்கையாழ்வாரும், பதினொன்றும் திருமுறையில் நக்கீரதேவ நாயனாரும் திருவெழு கூற்றிருக்கை பாடியுள்ளனர். இதற்குரிய இலக்கணத்தினை மாறன் அலங்காரம் முதலிய நூல்களிற் காணலாம்.

"...ஒருங்கிய மனத்தோடு
இருபிறப்பு ஓர்ந்து முப்பொழுது குறைமுடித்து
நான்மறை ஓதி ஐவகை வேள்வி
அமைத்து,ஆறு அங்க முதலெழுத்து ஓதி,
வரன்முறை பயின்று, எழுவான்தனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை..."

**7.** ஈரடி : இரண்டு அடிகளால் இயன்று குறள் வெண்பா முதலியவற்றின் வேறுபட்டு வருவது.

" பரசு பாணியர் பாடல் வீணையர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்(து)
அரசு பேணி நின்றார் இவர்
தன்மை அறிவார் ஆர் ?"

8. ஈரடிமேல் வைப்பு: செய்யுள்கள் பெரும்பாலும் நான்கடிகளால் அமைந்து வருதல் இயல்பு. அங்ஙனமின்றிச் செய்யுளின் நான்கடிகளில், முன்னை ஈரடிகள் ஒரு வகையாக வும் பின்னை ஈரடிகள் ஒரு வகையாகவும் அமைந்து, சந்தமும் பொருளும் ஒட்டி வைத்தது போலக் காணப்படுவது. இவ் வாறு வைப்பாக உள்ள பின்னை ஈரடிகள் ஒன்றேயாக வேனும், வெவ்வேறாகவேனும் மகுடம் போல வருவதுண்டு.

“ கொட்டமே கமழும் கொள்ளம் பூதூர்
நட்டம் ஆடிய நம்பனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே ”

9. நாலடிமேல் வைப்பு: ‘ஈரடி வைப்பு’ என்பது போலவே, நான்கு அடிகளுக்கு மேல் இரண்டி அடிகள் சந்த மும் பொருளும் ஒட்டிவைத்தாற் போல வருவது.

“ இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடுதுறை அரனே ”

10. திரு இராகம்: முடுகிய சந்தநலம் உடையதாய்க் குறில் நெடில் வல்லினம் மெல்லினம் இடையினம் என்னும் இவற்றில், ஏதேனும் ஒவ்வோரின எழுத்துக்களே மிக்குச் செறிந்து வரப் பாடல்தோறும் வெவ்வேறு வகையான எழுத் துக்களால் இன்னோசை நலங் கெழுமப் பாடப் பெறுவது. “வானவர்கள் தானவர்கள்” “வாளவரி கோளபுலி” “கோழை மிடறாக கவிகோளும் இலவாக” என்பன போலும் தொடக்க முடைய பல திருப்பதிகங்கள் திருவிராகம் எனப்படும். தமிழின் இனிய ஒலி நலத்தினையும் சொற்செல்வச் சிறப்பினை யும் இப்பதிகங்களிற் காணலாம்.

11. வழிமொழித் திரு இராகம்: மேற்கூறப் பெற்ற திருவிராக அமைப்பிலேயே, சீர்காழியின் 12 திருப்பெயர் களையும் முறை பிறழாமற் கிளந்தெடுத்துக்கொண்டு, அவற்

றினைப் பாடல்களின் கடைசியடிகளில் அவ்வவற்றிற்கு ஏற்ற எதுகை யமைதிகள் பெற வழிமொழிந்து பாடிச் செல்லுத லின், 'வழிமொழித் திருவிராகம்' எனப்படும். 'பல்பெயர்ப் பத்து' என்னும் பதிகமும் இவ்வாறே வரும்.

**12.** சக்கரமாற்று: சீர்காழியின் 12 பெயர்களும் சக்க ரத்தின் ஆர்கள் போல முறைமுறையே மாறிமாறிச் சுழன்று வரப் பாடப்பெறுவது.

"விளங்கியசீர்ப் பிரமனூர் வேணுபுரம்
புகலிவெங் குருமேற் சோலே
வளங்கவருந் தோணிபுரம் பூந்தராய்
சிரபுரம்வண் புறவம் மண்மேல்
களங்கமிலூர் சண்பைகமழ் காழிவயங்
கொச்சைகழு மலமென் றின்ன
இளங்குமரன் றன்னைப்பெற் றிமையவர்தம்
பகையெறிவித் திறைவ னூரே"

பசுவானது நடந்துகொண்டே சிறுநீர் பெய்யும்போது, அந் நீர் ஒழுகிய தாரையானது எவ்வாறு நெளிந்த வடிவுடன் மாறி மாறிக் காணப்படுமோ, அவ்வாறு பாடப்பெறும் கோமூத்திரி என்னும் சித்திர கவியையும்; திருக்கயிலாயம் திருவானைக்கா திருமயேந்திரம் திருவாரூர் என்னும் நான்கு தலங்களின் பெயரும் ஒவ்வொரு பாடலிலும் கூடி அமையும் படி பாடப்பெற்ற 'கூடற் சதுக்கம்' என்னும் ஒருவகைப் பாடலையும் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

**13.** திருத்தாளச் சதி: திருஞானசம்பந்தர் திருக் கோலக்காவில் இறைவன்பால் பொற்றாளம் பெற்றவாதலின், தாளக் கணக்கின் ஒலி நுட்ப நலங்கள் பலவும் அமைய, அரிய முறையிற் பாடிய 'பந்தத்தால் வந்தெப்பால்' என்னும் தொடக்கமுடைய திருப்பதிகம். இப் பதிகத்தின் சிறப்பினை "ஏழே ஏழே நாலே மூன்றிசை இசை யியல்பா" எனத் திரு ஞானசம்பந்தப் பெருமானார் தாமே புகழ்ந்து போற்றியிருத் தல் நினைந்துணரற்பாலது. 'தேமாங்காய் தேமாங்காய் புளிமா தேமா கூவிளம் தேமா தேமா தேமாங்காய் கருவிளம் கரு

விளங்காய்' என்னும் வாய்பாடு அமைய இப்பதிகம் பாடப் பெற்றுளது.

**14. யாழ்மூரி:** இதனை 'யாழ்முரி' எனவும் 'யாழ்முறி' எனவும்கூட வழங்குவர். திருப்பதிக இசை, கருவிகளின் அளவுபடாத சிறப்பும் மாட்சிமையும் செறிந்தது என்னும் உண்மையை உலகமக்கள் உணர்ந்துகொள்ளப் பாடப் பெற்ற "மாதர்மடப் பிடியும் மடஅன்னமும் அன்னதோர்" எனத் தொடங்கும் திருப்பதிகம். இயற்றமிழ் நலமும் இசைத்தமிழ் நலமும் ஒருங்கே சேர்ந்த இத் திருப்பதிகத்தின் சிறப்பு சைவத் தமிழுலகம் நன்கறிந்தது.

" முன்னது கூவிளமே – அதன் - பின்னது காய்தனை
யடை - யது - தனி - நிரை - நடுவினிற் பொருந்தி
அன்னவை தம்பிறகே - இரு – சீர்களும் கூவிளம்
கரு - விளம் - பகுத் - திட இரண்டிரண் டெனவே
சொன்னவை நாலசையாம் - அவை - சீருட னேவரச்
சொலும் - கடை - முடி - யவை - யொருவிளம் புளிமா
இன்னது யாழ்முறிப்பண் - என - ஞானசம் பந்தர்ப
கரும் - தனி - நடை - யுடைக் கவியெனப் பகரே"

முடிவுரை:—இங்ஙனமெல்லாம், திருஞானசம்பந்தர் பாடல்களிற் பலப்பலபுதுமைகளையும் வியத்தகு நுட்பங்களையும் காணலாம். 'பழைய முறைகளையே பின்பற்றிச் செல்லும் தன்மையானது புதிது புதிதாகப் படைக்கும் திறனுக்குப் பெரும்பாலும் பகையாகவே அமைகின்றது'("Conformity is often the enemy of creativity") எனத் திருவுளங் கொண்டு, தமது காலத்தில் தமிழ் நாட்டில் ஒருவகைப் புதுமையையும் புரட்சியையும் மறுமலர்ச்சியையும் சீர்திருத்தத்தினையும் விளைத்து, நம் தமிழ்மக்களுக்குப் பல்லாற்றானும் புத்துணர்ச்சியும் புத்துயிர்ப்பும் ஊட்டியருளிய திருஞானசம்பந்தப் பெருமானின் அருமை பெருமைகளை உணர்தற்கு, அவர் பாடிய இன்னோரன்ன பல புதுவகைப் பாடல்களை ஆராய்தலும் ஒரு நெறியாகும். 'கிளியோபேட்ராவின் மூக்கின் அமைப்புச் சிறிது நீண்டோ குறுகியோ மாறியமைந்திருந்தால், உலக வரலாறே முற்றிலும் மாறியமைந்திருக்கக் கூடும்' ("If Cleopatra's nose had been an inch longer or

shorter, all history would have been changed" —*Pascal*) என அறிஞர்கள் சொல்லுவதுண்டு. அதன் உண்மை எங்ஙனமாயினும், திருஞானசம்பந்தப் பெருமான் போன்ற நமது சமய ஆசிரியர்கள் தோன்றாதிருந்திருப்பின், நமது தமிழ் நாட்டின் வரலாறே முற்றிலும் சீர்குலைந்து மாறிப்போய் ஒழிந்திருக்கக் கூடும். அங்ஙனம் மாறிப்போகாமல் காத்து நின்று, சங்க காலத்தில் வழங்காத இத்தகைய பலப்பல புதுவகைக் கவிதைகளை மிகமிக வியக்கத் தகும் வகையில் பாடிக் காட்டி, நம் தமிழ் நாகரிகப் பண்பாட்டின் நலங்களையெல்லாம் அழிந்துபடாமல் வளர்த்தளித்த அரும் பெருஞ் சிறப்பு, "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய" ஞானசம்பந்தர்க்கே உரியதாகும். அதுபற்றியே, இவற்றின் அருமை பெருமைகளை யெல்லாம் நன்கினிது ஆராய்ந்துணர்ந்தவராகிய ஆசிரியர் சேக்கிழார் பெருமான், இன்னோரன்ன ஞானசம்பந்தர் பாடல்களை யெல்லாம் நம்மனோர்க்குப் பட்டியிட்டுத் தொகுத்துக் காட்டி, அவற்றின் நலங்களைத் தெருட்டுதற் பொருட்டு, அவற்றை "மூல இலக்கியம்" என விதந்தெடுத்து வியந்துரைத்துப் புகழ்ந்து போற்றி மகிழ்வாராயினர் என்பது !

"செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்களால் மொழிமாற்றும்
வந்தசொற்சீர் மாலை மாற்றும் வழிமொழி எல்லா மடக்குச்
சந்த இயமகம் ஏகபாதம் தமிழ்இருக்குக் குறள் சாத்தி
எந்தைக் கெழுகூற் றிருக்கை ஈரடி ஈரடிமேல் வைப்பு"

"நாலடி மேல்வைப்பு மேன்மை நடையின் முடுகும் இராகம்
சால்பினில் சக்கரம் ஆதி விகற்பங்கள் சாற்றும் பதிக
மூல இலக்கியம் ஆக எல்லாப் பொருள்கோளும் முற்ற
ஞாலத் துயர்காழி யாரைப் பாடினர் ஞானசம்பந்தர் !"

---

## ஹிந்து தர்மப் பிரசார சங்கம்

சங்கத் தோற்றம் :—மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீனகர்த்தராக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள், 1955-ஆம் ஆண்டு ஜூன் மாதக் கடைசி வாரத்தில் சென்னை தியாகராய

நகரிலுள்ள தருமையாதீன மடாலய தேவாலயப் பிரசார நிலையத்திற்கு எழுந்தருளியபோது, அவர்கள் தலைமையில் ஹிந்து மதப் பேரறிஞர்களின் ஆலோசனைக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. அக் கூட்டத்தில் இச்சங்கம் தொடங்கப் பெற்றது.

ஹிந்து தர்மப் பிரசார சங்கச் செயற் குழுவினர்:— தலைவர்: மதுரை - திருஞானசம்பந்தர் ஆதீனத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள். துணைத்தலைவர்கள்: (1) திவான்பகதூர் - வி. பாஷ்யம் ஐயங்காரவர்கள், எம்.எல்.சி., (2) திவான் பகதூர் - கே. வேங்கடசாமி நாயுடு அவர்கள், பி.ஏ.,பி.எல்., (3) திவான்பகதூர் - கே. எஸ். ராமசுவாமி சாஸ்திரியாரவர் கள், பி.ஏ., பி.எல்., (4) தர்மரக்ஷாமணி - ஸ்ரீ கே. பால சுப்பிரமணிய ஐயரவர்கள், பி.ஏ., பி.எல்., எம்.எல்.சி., (5) திவான் பகதூர் - சி. திருவேங்கட முதலியாரவர்கள், பி.ஏ., (6) ஸ்ரீ என். ரகுநாத ஐயரவர்கள், எம்.ஏ., (7) ஸ்ரீ ஏ. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள், எம்.ஏ., (8) ஸ்ரீ திருமுருக கிருபானந்தவாரியாரவர்கள், (9) ஸ்ரீ ஏ. பரசு ராமன் அவர்கள், எம்.ஏ., (10) ஸ்ரீ பரசுராம் ஜெதானந்த் அவர்கள். செயலாளர்கள்: (1) ஸ்ரீ எஸ். சச்சிதானந்தம் பிள்ளையவர்கள், பி.ஏ., எல்.டி., (ஓய்வு பெற்ற மாவட்டக் கல்வி அதிகாரி), (2) ஸ்ரீ எம். ஏ. ஸ்ரீநிவாச ஐயங்காரவர்கள், பி.ஏ., பி.எல்., (வக்கில்). பொருட் காப்பாளர்: டாக்டர் வி. ராகவன் அவர்கள், எம்.ஏ., பிஎச்.டி. பிற அங்கத்தவர்கள்: (1) ஸ்ரீ ஏ. ஜி. வெங்கடாசாரியாரவர்கள், பி.ஏ., (2) ஸ்ரீ கே. வி. ஜெகந்நாதன் அவர்கள், எம்.ஏ., (3) ஸ்ரீ ஆர். விசுவநாத ஐயர் அவர்கள், எம்.ஏ., (4) ஸ்ரீ அய்யா சுப்பிரமணிய முதலியாரவர்கள், (5) ஸ்ரீமதி - சகோதரி - ஆர். எஸ். சுப்புலக்ஷ்மியம்மாளவர்கள், பி.ஏ., எல்.டி., (6) ஸ்ரீ ஜோதி வேங்கடாசலம் அவர்கள், எம்.எல்.சி., (7) ஸ்ரீ வீர. சிவசுப்பிரமணியமவர்கள், (8) ஸ்ரீ வி. எஸ். கோபாலகிருஷ்ண ஐயரவர்கள், பி.ஏ., எல்.டி., (9) ஸ்ரீ கே. இ. அருணாசல முதலியாரவர்கள்

**சங்க நோக்கம் :—** இச் சங்கத்தின் முக்கிய நோக்கங்களாவன : (1) ஹிந்து தர்மத்தின் அடிப்படைத் தத்துவங்களை ஹிந்து மாணவர்கட்கும், எளிய ஹிந்து மக்கட்கும் ஏற்ற முறையில் எடுத்துரைத்தல். (2) ஹிந்து சமுதாயத்திற்குள் ஒற்றுமையை வளர்த்தல். (3) பயிற்சி தந்து, தக்க பிரசாரகர்களை நியமித்துப் பல இடங்களில் வருஷ முழுவதும் சிறந்த பிரசாரம் நடத்துவித்தலும், தம் வாழ்க்கையை இத் தொண்டிற்கே உரிமையாக்க முன்வருபவர்களை ஆதரித்தலும். (4) கிளைச் சங்கங்களைப் பல ஊர்களில் ஏற்படுத்தலும், முன்னமே உள்ள ஹிந்துமத சங்கங்களை இணைத்துக் கொள்ளுதலும். (5) மிகவும் ஏழ்மையான நிலையிலுள்ளோர்க்கு இயன்றவளவு சீவகாருணியத் தொண்டு புரிதல்.

**சிறப்புக் கூட்டம் :—** சில உச்சவரம்புச் சட்டம் செய்வதற்காகச் சென்னை அரசாங்கத்தார் கொண்டு வந்துள்ள மசோதாவைப் பற்றி ஆராய்ந்து, ஆவன புரிவதற்காக, தியாகராயநகர் தருமையாதீனப் பிரசார நிலையத்தில் சங்கத்தின் செயற் குழுக் கூட்டம் 13-5-60-ல் கூடியது. அது செய்த தீர்மானத்தின்படி, 5-6-60-ல் இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபையில், ஹிந்துக்களின் பொது ஜனக் கூட்டம் திவான்பகதூர் கே. எஸ். இராமசுவாமி சாஸ்திரியாரவர்கள் தலைமையில் கூட்டப்பட்டது. திவான்பகதூர் ஆர். வி. கிருஷ்ண ஐயரவர்கள், ஸ்ரீ டி. புருஷோத்தம் அவர்கள், ஸ்ரீ எம். ஏ. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் அவர்கள், ஸ்ரீ சுவர்ண வேங்கடேச தீக்ஷிதரவர்கள் ஆகியோர், இச் சட்டத்தால் இந்து கோயில்கட்கு விளையக்கூடிய கெடுதிகளை விளக்கினர். ஒரு யாதாஸ்து தயாரித்து, சங்கச் சார்பில், ஷை மசோதா ஆராய்ச்சிக் குழுவிற்கு அனுப்பவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.

சென்னை மாகாண இந்து அறநிலையப் பாதுகாப்பு இலாகாவிற்கு அரசாங்கத்தார் நியமித்துள்ள ஆலோசகர் குழுவில் 12 பேர் உத்தியோகப் பற்றற்றவர்கள். இவர்களில் அறுவர் இச் சங்க நிருவாகசபை யுறுப்பினர். திருவருட்

செயலாக வந்தெய்திய இவ் வாய்ப்பு நன்றியுடனும் மகிழ்ச்சியுடனும் குறிக்கத் தக்கதாகும்.

**வேண்டுகோள் :**—சங்கம் மேற்கொண்டுள்ள பணி பெரியமலை போன்றுள்ளது. சங்கத்திற்குக் காரியாலயமும் அவசியமான சிப்பந்திகளும் தேவை. பல பிரசாரகர்கட்கு ஊதியமோ சன்மானமோ அளிக்கவும், லக்ஷக்கணக்கில் துண்டுப் பிரசுரங்களும், சிறுவடிவ நூல்களும் அச்சிட்டு வழங்கவும் வேண்டும். மிகவும் எளிய மக்கட்கு இன்னும் பல வகையில் உதவிகள் செய்ய வேண்டும். ஹிந்து சமுதாயம் முழுதுமே இதற்குத் துணைபுரிய முன் வந்தாலன்றி, நம் பாரதப் பண்பாட்டைக் காப்பாற்றுதற்கு அத்தியாவசியமான இப்பணி இனிது நிறைவேறல் அரிது. ஆகலால், பல ஆயிரக்கணக்கில் ஹிந்துக்கள் அங்கத்தவர்களாகவும், ஆயுளங்கத்தவர்களாகவும் உடனே சங்கத்திற் சேர்ந்து அதைப் பலப்படுத்தலும், நமது மாநில ஹிந்துமத சங்கங்கள் யாவும் இச்சங்கத்தோடு தம்மை இணைத்துக் கொண்டு நம் சமுதாயத்தின் ஒற்றுமையையும் செல்வாக்கையும் வளர்த்துக் கொள்ளுதலும் மிக அவசியம்.

இப்படிப் பலரும் சேரவேண்டும் என்பதைக் கருதியே, சாதாரண அங்கத்தவர் ஆண்டுச் சந்தா மூன்று ரூபாயாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஆயுள் சந்தா : ரூ 100.

ஹிந்து மதத்தின் எல்லாப் பிரிவினர்களும் இவ்வாறு சங்கத்திற்சேரவேண்டும் என்றும், எல்லா ஆலய தர்மகர்த்தர்களும் திருமடத்தலைவர்களும், பொருளையும் நல்ல தொண்டர்களையும் போதிய அளவு தந்து, இப்புனிதத் திருப்பணியை வெற்றியுடன் தொடர்ந்து நிறைவேற்றிவரத் துணைபுரிய வேண்டுமென்றும் அன்புரிமையுமையுடன் சங்கம் பெரிதும் வேண்டிக்கொள்ளுகிறது. எல்லாம் வல்ல இறைவன், அவனையே நம்பித் தொண்டாற்ற முன்வந்துள்ள இச்சங்கத்திற்குக் கருணை பாலித்து, அளப்பரும் சிறப்பினையுடைய நமது ஹிந்து தர்மத்தைக் காத்து உலகுய்யச் செய்தருளுவானாக. —ச. சச்சிதானந்தம் பிள்ளை, செயலாளர்.

——

# " படைப்பின் கருத்து "

[கோவை கிழார்]

படைப்பைக் குறித்துப் பலவேறு சமயங்கள் பலவகை களாக ஓதுகின்றன. யூதர், கிறித்துவர், இசுலாமியர் என்ற சமயத்தார்கள் இறைவன் ஒரே வாரத்தில் எல்லாவற்றையும் படைத்தான் என்று கூறுகின்றன. ஆறு நாட்களில் விண், மண், உலகப் பொருள்கள், உயிர் வகைகள் முதலிய எல்லா வற்றையும் படைத்துவிட்டு ஏழாவது நாள் இறைவன் இளைப்பாறினன் என்று அன்னார் நூற்கள் கூறுகின்றன. அப்படிப்பட்ட படைப்பில் இறைவன் மனிதனைப் படைத்து அவனுடைய விலா எலும்பை யெடுத்து அதை ஒரு பெண்ணுருவாக்கி அவனுடன் வாழ்வதற்கு " ஏதேன் " என்ற பூங்காவைப் படைத்து அதில் இருக்கும்படி செய் தான். எல்லா உயிர்களும் அவனுக்குக் கீழ்ப்படியும் படியும் அவைகளோடு எல்லாப் பொருள்களையும் அவனுடைய உணவு முதலியவைகளுக்குப் பயன்படும் படியும் ஆணையிட் டான். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை இடப்பட்டது. அந்தப் பூங்காவின் இடையில் ஒரு பழமரம் இருந்தது. அதன் கனியை மட்டும் அவன் உண்ணக்கூடாது என்பது அவன் ஆணை. முதல் மனிதனுகிய " ஆதாமும் " அவன் மனைவி " ஏவாளும் " வெகு இன்பமாக அப்பழத் தோட்டத் தில் வாழ்ந்து வந்தார்கள். அப்படியிருக்க ஒருநாள் கடவு ளுடைய பகைவனுன பிசாசு ஒரு பாம்பைத் தூண்டிவிட்டு ஏவாளை அப்பழத்தை உண்ணும்படி தூண்டிற்று. ஏவாள் தானும் உண்டுவிட்டு ஆதாமுக்கும் அதை உண்ணக் கொடுத்தாள். அது அறிவுப் பழம். அதனை உண்ட இருவரும் தாங்கள் உடையின்றி இருப்பதை அப்போது தான் அறிந்தார்கள். கடவுள் ஆணையைக் கடந்ததினுல் அவர்கள் பாவஞ் செய்தவர்கள் ஆனுர்கள். கடவுளால் சாவு அடையும் படி சபிக்கப்பட்டார்கள். அவர்களுடைய சந்ததியில் பிறந்தவர்கள் தான் தற்கால மனித வர்க்கத்தார்கள். ஆகவே மனிதவர்க்கம் முழுவதும் பாவஞ் செய்ததாயிற்று. இது தான்

மேலே கூறிய மூன்று வகுப்பாரின் படைப்பு வரலாறு. இந்த வரலாறு பழைய ஏற்பாடு என்னும் விவிலிய நூலில் இருக்கின்றது. பின்பு ஏற்பட்ட புதிய ஏற்பாடு, "மனிதவர்க்கத்தைப் பாவத்தில் இருந்து நீக்குவதற்காகத் தேவகுமாரன் உலகத்தில் பிறந்து தன் இரத்தத்தைச் சிந்தி அவர்களை ஈடேறுவதற்கு வழிகாட்டினான்" என்று கூறுகிறது. இது தான் கிறித்துவர்களுடைய திருமறையின் கருத்தாகும்.

இனி, நமது நாட்டில் இந்து சமயத்தில் வேறுவிதமாகப் படைப்பு முறை கூறப்பட்டுளது. இறைவன் ஒருவனாக இருந்த போதிலும் அவன் செய்யும் தொழிலை முன்னிட்டு மூன்று அல்லது ஐந்து உருவங்களாகத் தோன்றுகின்றான். அவைகள் முறையே படைப்புக் கடவுள், காக்கும் கடவுள், அழிக்கும் கடவுள் எனப்பட்டனர். சைவ சித்தாந்தத்தின்படி மறைக்கும் கடவுள், அருளும் கடவுள் என்ற இரண்டும் சேர்ந்து ஐந்து உருவங்களாயின. படைப்புக் கடவுளினுடைய தொழில் முற்றும் உலகில் தோன்றும் உடல்களை மாற்றி அமைப்பதேயாகும். அவைகளில் உயிர் அல்லது ஆன்மா குடியிருக்கும். இவ்வுயிர்கள் வாழும் பொருட்டுக் காக்கும் கடவுள் காக்க, அழிக்கும் கடவுள் உடல்களை அழிப்பார். சித்தாந்தத்தின்படி மற்ற இரண்டு மூர்த்திகளும் உயிர்களுக்கு மறைப்பும், அருளும் தருவார்கள். இந்த வகையில் இந்திய உலக உற்பத்தியேற்பட்டு இருக்கின்றது. மேல் நாட்டிற்கும், கீழ்நாட்டிற்கும் படைப்பு முறையில் வேற்றுமைகள் உண்டு, என்றாலும் அடிப்படையான கருத்து ஒன்று என்று அறிய வேண்டும். உயிர்கள் வாழும் பொருட்டுக் கடவுள் அவைகளுக்கு உடல்களைப் படைத்துத் தந்தான் என்பதே யாகும்.

இனி, இவ்விதமாகப் படைத்து, காத்து அழிக்க வேண்டிய செயல் எதற்காகச் செய்யப்படுகின்றது என்பது தான் மனிதனுடைய சாதாரண அறிவிற்கு அப்பாற்பட்ட ஒரு செய்தியாகும். ஏன் மனிதன் படைக்கப்பட வேண்டும்? அவன் ஏன் பாவ புண்ணியங்களுக்கு இடர்ப்படவேண்டும்? முடிவில் அவன் ஏன் வருந்த வேண்டும்? இப்படிப் பட்ட

கேள்விகள் பல இளைஞர்களால் கேட்கப்படுகின்றன. அவர்கள் திருப்தியாகும்படியான விடையை ஒருவன் சொல்வதில்லை. மேல் நாட்டார்களுடைய நூல்களில் இதற்குச் சரியான விடை கிடைப்பதில்லை. இறைவனுடைய ஆணை அல்லது சங்கற்ப மென்று ஒரே சொல்லில் விடை தருகிறார்கள். அதைத் திருப்பிக் கேட்டால் யாதொரு பதிலும் இல்லை. இந்திய நாட்டின் தத்துவ ஞானிகள் வேறு விதமாகக் கூறுகின்றார்கள். ஐந்து தொழில்களையும் இறைவன் புரிவது ஆன்மாவின் முன்னேற்றத்திற்காகத்தான். ஆன்மா தன்னைப் போலப் பேரின்பம் அடையவேண்டு மென்பது அவன் கருத்து என்பர். ஆனால் மேற்கொண்டு ஏன் இவ்வாறு செய்ய வேண்டுமென்று கேட்டால் அது இறைவனுடைய திருவிளையாட்டு என்ற ஒரு சொல்லில் விடை கூறுகிறார்கள். இதுபோதுமா ?

மனிதனுடைய படைப்பு முதலியன இறைவனுடைய திருவிளையாட்டின் பயன் என்று கூறினால் ஏன் அவனுக்கு இந்தத் திருவிளையாடல் வேண்டும் ? இதைச் செய்யாமலேயே அவன் இருக்கக்கூடாதா ? என்ற வினா பிறக்கின்றது. உலகில் மக்கள் எப்போதும் இன்புற்று இருந்தால் ஒருவரும் அதனை வெறுக்கமாட்டார்கள். ஆனால் துன்பம் வந்தால் அவர்கள் வருந்துவதைப் பார்த்து ஏன் இது ஏற்பட வேண்டும் ? இறைவன் இப்படியும் படைப்பதற்குக் கருணை இல்லாதவனா ? என்று கேட்கக்கூடும். உலகில் சில பேர் நல்லவர்களும் சில பேர் கெட்டவர்களுமாக இருப்பதேன் ? இவ்வாறு இல்லாமல் எல்லோரும் நல்லவர்களாக இருக்க ஏன் கருதக்கூடாது? தன் குடிகளைப் பல தீங்குகளைச் செய்து வருத்திக் கொலைபுரிந்த நீரோ மன்னன்போல இறைவன் தன் மக்களை வருத்தத்திற்குள்ளாக்கி அதைக்கண்டு மகிழ்கின்றானா? அப்படியானால் அவன் செய்யும் இந்தச் செயல் இறைவனுக்குத் தகுந்த செயலாகுமா ? என்று ஒரு கேள்வி கேட்கப்படுகிறது.

இக் கேள்விகளை யெல்லாம் நன்றாக யோசிக்கும் போது இவைகளுக்கு அடிப்படையாய் நிற்கின்ற படைப்புத்தான்

ஏன் உலகில் ஏற்பட வேண்டுமோ ? படைப்பே இல்லாமல் இருக்கும் பட்சத்தில் இப்பேர்ப்பட்ட தொல்லைகள் ஏற்படா மல் இருக்கும் அல்லவா ?

ஆனல் ஒரு செய்தி நினைவில் இருக்கவேண்டும். கண் கூடாக இந்த உலகம் நமக்கு எதிரில் இருப்பதைக் காண் கின்றோம். இதனைப் பொய் என்று கூறுவதற்கு வகையில்லை. உயிர்களும் இன்பமும் துன்பமும் அடைந்து கொண்டே இருக்கின்றார்கள். இதனையும் வெறும் மாயை யென்று சொல்வதற்கில்லை. ஆகவே இயற்கையில் நடைபெறும் இச் செய்திகளைக் கொண்டு நாம் உட்கருத்தை ஆராய்வது நன்று. இறைவன் எல்லாவற்றிற்கும் முதற்காரணமாக இருக் கின்றான். உயிர்கள் அறிவுள்ளவைகள். உடல் அறிவற்றது. அவ்வுடலை இறைவன் உயிருக்குக் கொடுகின்றான். உயிர் சிற்றறிவுடையதாகலின் நல்லதும் பிழையும் செய்யும், அதற்குத் தகுந்தபடி இன்பமும், துன்பமும் அடையும். இதுவே உலக தத்துவம் என்று சுருக்கமாகக் கூறலாம். முப்பொருள் உண்மையை அறிந்தவர்கள் இந்த நிலைமையின் பொருளை அறிவார்கள். இதுதான் தக்க விடை யென்று சித்தாந்தம் கூறுகின்றது. மேற்கு வெள்ளையர்களும் ஏனையோரும் இதனை அறியாமல் திண்டாடுகின்றார்கள்.

---

## "கோழை அடைக்கின்றது அண்ணற் குறிப்பினில்"

—திருமந்திரம்

(சித்த வைத்தியர் - பு. வே. தேவராஜ முதலியார், திருப்பாதிரிப்புலியூர்)

வீட்டின்பம் நாடியிருப்போர் உடம்பையும் அதற்கான பொருந்தும் உணவு, பொருந்தா உணவு, வெப்பதட்பமான இருக்கை முதலியவற்றையும் கவனிப்பதில்லை. இதனையே, பொதுவாக, தேகாபிமானம் விட்டிருத்தல் என்று சிலர்

எண்ணுகிறார்கள். அங்ஙனமே, நமது திருமூலரும் முதலில் எண்ணினார்கள். பின்னர் அவர் சொல்வார் :

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான்என்
றுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே."

இக்கருத்தினையே அவர் தம்மனுபவமாகத் திருமந்திரத்தில், " உடம்பா ரழியில் உயிரார் அழிவர், திடம்பட மெய்ஞ் ஞானம் சேரவும் மாட்டார்" என்று மேலும் விளக்கி யுள்ளார்.

2. உலகில் எல்லா உயிர்களும் அண்ட பிண்ட சம்பந்தமாகவே வாழ்ந்து வருகின்கிறன. வெளியே யுள்ள மண், தீ, நீர், காற்று இவற்றினுடைய சம்பந்தம் பெற்றே ஜீவனோடு வாழமுடியுமே அல்லாமல், இவையின்றித், தனிப்பட்ட தன்னுடைய சரீரத்தினுள்ளேயே பிறிதொன்றின் உதவி யின்றி வாழமுடியாது. ஆனாலும், யோக பலத்தினால் மனோலயம், பிராணலயம் பெற்று வெளிக்காற்றின் உதவி யின்றியே, பல்லாண்டுகள், ஏன் பல யுகங்கள் வாழமுடியும். அப்படி வாழ்ந்தவர்கள் திருமூலர் போன்ற சித்தர்கள். அதற்கு இந்தச் சரீரத்தின் சித்தி அவசியம். காயத்தின் சுத்தி இல்லாது காயத்தின் சித்தி இபலாது. காயத்தினுள்ளே கமழ்கின்ற நந்தியை நமக்குத் திருமூலர் எப்படி விளக்கி யுள்ளார் காண்க :

" காயக் குழப்பனை காய்நன் னுடனை
காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியை
தேயத்துளே என்றுந் தேடித் திரிபவர்
காயத்து ணின்ற கருத்தறி யாரே."

3. இனி, நம் தேகம் எப்படிச் சிவாலயம் எனச் சொல்லப் பட்டது என்று கவனிப்போம். இந்தச் சரீரம் தேகாலயம் என்றும், காயாபுரிக்கோட்டை என்றும், பிரம்புரி என்றும், விஷ்ணு ஆலயம் என்றும் நம் சாத்திரங்களிலே சொல்லப் பட்டிருக்கிறது. இந்தச் சரீரம் விசித்திரமான அமைப்பை

உடையது ; பத்து வாயில்களுடைய பட்டணத்தை (தசத்துவாரபுரம்) யுடையது; பத்து நாடிகளைப் பெரிய வழிகளாக யுடையது ; பத்து வாயுக்களால் வியாபிக்கப்பட்டது ; பத்து இந்திரியங்களாலாகிய பரிவாரங்களை யுடையது ; ஆறு ஆதாரங்களாகிய அறைகளை யுடையது ; ஆறு வம்சங்களாகிய பெரிய வனத்தையுடையது ; நான்கு பீடங்களால் நிர்மாணிக்கப்பட்டது ; நான்கு வேதங்களையும் விளக்குவது ; பிந்துவையும் நாதத்தையும் லிங்க வடிவமாக வுடையது ; சிவசக்திகளுக்கு வீடாக இருப்பது; எல்லாத் தேகிகட்கும் சித்தியைக் கொடுப்பது. இதனாலேயே இப்படிப்பட்ட இத்தேகத்தைச் சிவாலயமாக நம்முன்னோர்கள் கூறினார்கள். தேகத்தின் பெருமை தெரிந்து போற்றி வழிபட்டார்கள். கீழ்வரும் திருமூலர் வாக்கினில் யாக்கையின் வடிவு காண்கின்றோம் ; சிவலிங்கம் காண்கின்றோம் ; சிதம்பரம் காண்கின்றோம் ; சதாசிவம் காண்கின்றோம் ; அண்ட சராசரங்களை இயக்கும் நடராஜனின் திருக்கூத்தைக் காண்கின்றோம். வியக்கின்றோம், வியக்கின்றோமல்லவா ?

“ மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே.”

இந்த அற்புதமான சரீர அமைப்பையுள்ளூறக் கருதியே “ மாயா இயந்திரதநு ” என்று மெய்கண்டார் தமது நூலில் நுட்பமாய்க் கூறியருளினார்கள் என்பதும் இங்குச் சிந்தனைக் குரியது.

4. இப்படிப்பட்ட சிறந்த நம் தேகத்தை நம் முன்னோர்கள் எப்படிப் பாதுகாத்து வந்தனர் ? இந்தச் சரீரத்தில் நோயின்றி வாழ்வதற்கு முக்குற்றங்கள் நீங்க,வைத்து இயலச் செய்ய வேண்டுமென்று நம்முன்னோர் தெரிந்திருந்தனர். முக்குற்றமாவன, வளி, பித்து, ஐயம் என்னும் முத்தோஷங்களே. இதனையே வாத, பித்த, கபம் என்று வைத்திய நூலில் சொல்லப்படும். இவற்றை முறையே ஒன்று, அரை,

கால் என்னும் மாத்திரையாகவும், நம் சரீரத்தில் அங்காடிகளை (குறிப்பிக்கும் தோஷங்களை) "வைத்தியலச்செயல் வைத்தியமாமே" என்ற திருமூலர் எண்ணூபிரத்தில் கண்டுள்ள வாக்கினாலும் நம் பெரியோர்கள் நம்முடம்பின் ஆரோக்கிய நிலை கண்ட வழியினைக் காண்கின்றோம். இத்தோஷங்களின் அளவுகள் ஒன்றுக் கொன்று சம்பந்தப்பட்டும், மிகுந்தும், குறைந்தும் காணப்பெறின் உடம்பு நோய்வாய்ப்படுகிறது. ஈண்டுத் திருவள்ளுவர் மொழியினையும் கருத்திற் கொள்வோம் :

"மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று" —திருக்குறள்

5. வாதபித்த ஐயங்களை அரசன், அமைச்சன், அணித்தலைவன் என்று தேரையர் உருவகப்படுத்தியுள்ளார். சரீரத்தில் உள்ள இந்த மூன்று குற்றங்களை ஐம்பூதங்களுக்குப் பாகுபடுத்தி ஐயத்தைக் கபம் என்றும், கோழை என்றும், தண்ணீர் என்றும் தத்துவத்தால் நிறுவப்பட்டிருப்பதைக் காண்கின்றோம். தண்ணீர் பெருவெள்ளங்கொண்டால் நெருப்பை அணைத்துவிடும். காற்று மிகுதிப்பட்டால், நெருப்பு மிகுதிப்படும். நமது உடலில் இந்த ஐயும் மிகுதிப்பட்டால், இந்த உடல் நிலைப்பது ஐயமேயாம். இது குறித்தே,

"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டு
ஐம்மேலுந்தி, அலமந்தபோதாக அஞ்சேலென்று
அருள் செய்வான் அமருங்கோயில்"

(திருஞானசம்பந்தர் தேவாரம்)

என்றும்,

"குந்தி நடந்து குனிந்தொருகைக் கோலூன்றி
நொந்திருமி எங்கி நரைத்தேறி—வந்துந்தி
ஐயாறு, வாயாறு பாயாமுன் நெஞ்சமே
ஐயாறு வாயால் அழை" (க்ஷேத்திரத் திருவெண்பா)

என்றும், கோழை அடைக்காமுன் அருள் பெறுமுறைதனைப்

பார்க்கின்றேமல்லவா ! அருள் பெறும்வழியில் பெரியோர் காட்டும் ஆர்வந்தானென்னே !

" உள்ளம்பெருங் கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானர்க்கு வாய்கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே."

மேற்கண்ட திருமந்திரப்பாடலில் வாய் கோபுரவாசல் என்ற சொற்றெடரை எண்ணிப் பார்த்தால், 'அண்ணாற் குமிப்பு' எந்த இடமென்று நமக்குத் தெரியவரும். இதை மிகவிளக்கமாய், "கோழை அடைக்கின்றது அண்ணாற் குமிப் பினில்" என்ற திருமந்திர வாக்கியத்தில் நாம் உணர்ந்து சிந்திப்போமானுல், அந்த இறை நிலை இடமும், அங்குத் தடைப் படுத்தும் கபத்தின் குற்றத்தைக் களைய வேண்டிய இன்றியமையாமையும் நமக்குத் தெளிவாய் விளங்குகின்றது. ஸ்தூலவகையினல் கரிசாலை, தூதுவளை, திப்பிலி முதலிய வைகளைக் கொண்டு கபத்தை நீக்கும் வகைகள் பல வைத்திய நூலில் சொல்லியிருக்கின்றன. சூக்கும வகையால், இடை விடாத தியானம், பஞ்சாக்ஷரஜபம், வளி நிலைப் பழக்கம் இவற்றல் கோழையை யகற்றலாம் ; அப்போது, 'அண்ணாற் குறிப்பிட'மும் தடை யேதுமின்றி விளங்கும்.

---

# கடவுளால் முடியாத காரியங்கள்

[முரு. பழ. இரத்தினம் செட்டியார்]

(மலர் - 33 ; - இதழ் - 6 ; 192-ம் பக்கத் தொடர்ச்சி)

(2) இறைவன் அநாதியே இருப்பவனுதலால், எல்லாம் வல்ல அவன், தன் வல்லமையால் உயிர்களின் எளிய இயல்பை மாற்றி ஆணவமலத்தால் மறைப்புருதவாறு செய் திருக்கக்கூடாதா ? நல்ல கேள்வி. ஒரு பொருளின் இயல்பை மாற்றுவதென்பது அப்பொருளையே இல்லாமற் செய்வ தாகும். அஃதாவது ஒரு பொருளின் இயல்பு சிறிது மாறினு லும் அப்புறம் அவ்விடத்தில் அந்தப் பொருள் இல்லை ;

வேருெரு பொருள் இருக்கிறதென்று அர்த்தம். இதனை அமெரிக்க நாட்டுத் தத்துவ நூற் புலவரான 'வில்லியம் ஜேம்ஸ்' (*Prof. William James*) பின்வருமாறு மிக அழகாகச் சொல்கிருர் :—

"If any part whatever in an individual were to vanish or alter, it would no longer *be that individual at all*"

[தனித்தன்மை வாய்ந்த ஓர் உயிரின் ஏதேனும் ஒரு கூறு அழிந்தாலும் அல்லது மாறினுலும் அப்புறம் அஃது அந்த உயிராக இருக்கமாட்டாது.]

'வில்லியம் ஜேம்ஸ்' கூறும் ஆழ்ந்த இந்தக் கருத்து, சைவசித்தாந்தத்திற்கு உயிர் போன்றதாகும். ஆன்மாக்கள் அநாதியாக உள்ளவை ; எனவே அவை அழியமாட்டா. ஒரு பொருளை அழித்தால் அன்றி அதன் இயல்பை மாற்றமுடியாதாதலால், அழியாத தன்மை வாய்ந்த ஆன்மாக்களின் இயல்பை மாற்ற முடியாதென்பது நன்கு விளங்கும். விவாதத்திற்காக, எல்லாம்வல்ல இறைவன் தன் வல்லமையால் உயிர்களின் இயல்பை மாற்றுகிருன் என்று வைத்துக் கொள்வோம். உயிர்களின் கதி என்னுகும் ? ஓர் உயிரின் ஏதேனும் ஒரு கூறு சிறிது மாறினுலும், அப்புறம் அஃது அந்த உயிரன்று என்பதை நினைத்துப் பார்க்கவேண்டும். இறைவன் உயிர்களின் இயல்பை மாற்றுவதென்பது அந்த உயிர்களை இல்லாமற் செய்துவிட்டுப் புதிய உயிர்களை அவ் விடத்தில் தோற்றுவிப்பது என்ருகும். புதிய உயிர்களை உண்டாக்கிப் பார்க்கவேண்டும் என்னும் ஆசையோ, அவசியமோ இறைவனுக்கு இருக்கமுடியாது. இருக்கிற உயிர்களுக்கு இரங்கித் துணைசெய்யப்போய் அவைகளை இல்லாமற் போகும்படி தீர்த்துக் கட்டுவது அறிவுடைமையுமன்று ; கருணையுமன்று. இறைவன் எல்லாம் வல்லவனுக மட்டும் இருந்தால் நினைத்தபடி என்னவேண்டுமானுலும் செய்யலாம். அவன் எல்லையில் கருணையும் முற்றறிவும் உடையவனுக இருத்தலால் ஏழை உயிர்களின் இயல்புகளுக்கேற்றவாறே

தன் ஆற்றலை உபயோகப்படுத்த வேண்டியதிருக்கிறது. 'எல்லாம் வல்லவன்' என்பதற்கு உயிர்கள் என்ன ஆனாலும் சரி என்று நினைத்தபடியெல்லாம் செய்பவன் என்பது பொருளன்று. அவைகளுக்கு இரங்கி, அவற்றின் இயல்புகளுக்கு ஏற்றவாறு எந்தவகையான உதவிகளைச் செய்தால் அவை ஆணவமல பந்தத்தினின்றும் விடுபடுமோ, அந்த வகையான உதவிகள் அனைத்தையும் குறைவறச் செய்து முடிக்கும் வல்லமை வாய்ந்தவன் என்பதே அங்ஙனம் கூறுவதற்குப் பொருளாகும். செய்பவேண்டுவன எல்லாவற்றையும் செய்து முடித்தலே எல்லாம் வல்லமை ஆகுமன்றிச் செய்யவேண்டாத செயல்களை—அஃதாவது இருக்கிற உயிர்களை அழித்து விட்டுப் புதிய உயிர்களை உண்டாக்குவது போன்ற செயல்களைச் செய்வது, "எல்லாம் வல்லமை" ஆகாது. எனவே உயிர்கள் தம் எளிய இயல்பால் அநாதியே ஆணவமல மறைப்புக் குள்ளாவதை இறைவன் தன் வல்லமையால் மாற்றலாம் தானே எனக் கேட்பதிற் பொருளில்லாமற் போகிறது.

3. உயிர்களின் எளிய இயல்பை மாற்ற முடியாதென்றால் அவை எங்ஙனம் முத்தியில் ஆணவமல மறைப்பினின்றும் விடுபடமுடியும் ? உயிர்களின் எளிய இயல்புகள் முத்தியிலும் அப்படியே தாம் இருக்கின்றன. துணைகொண்டு அறியும் அவற்றின் அறிவு அங்கும் திருவருளைத் துணையாகக் கொண்டுதான் அறிகிறது ; பற்றிய பொருளில் அழுந்திப் போகும் அவற்றின் அறிவு எங்ஙனம் கேவலத்தில் ஆணவமலத்தைப்பற்றி அதனுள் அழுந்தியதோ, அதேபோல்தான் முத்தியிலும் இறைவனைப்பற்றி அவனுள் அழுந்துகிறது. எனவே இயல்புகள் மாறவில்லை. இறைவனைப்பற்றி நிற்கும் சார்ச்சி விசேடத்தாலேயே அவை ஆணவமல மறைப்பினின்றும் விடுபடுகின்றன.

4. அநாதியிலேயே இறைவன் ஆன்மாக்களுடன் ஒன்றாகக் கலந்து தானே இருக்கிறான் ; அப்பொழுது ஆணவமலம் ஆன்ம அறிவை மறைத்திருக்கும்பொழுது, முத்தியில் எங்ஙனம் மறைக்காமல் இருக்கும் ?

அநாதியிலேயே இறைவன் ஆன்மாக்களுடன் ஒன்றாகக் கலந்துதான் நிற்கிறான்; அவன் சந்நிதியில் நிற்பினும் ஆன்மாக்கள் அவனைப் பற்றாமல் ஆணவமலத்தைப் பற்றியமையால், பற்றிய பொருளில் அழுந்தி அதன் வண்ணமாகும் இயல்புப்படி அவை ஆணவமல மறைப்புக்குள்ளாயின. முத்தியில் இறைவனைப்பற்றி அவன் வண்ணமாவதால் அம் மறைப்பினின்றும் விடுபடுகின்றன. ஆணவமலம் இறைவனைப் பந்தப்படுத்த முடியாதது ஆதலால், அவன் வண்ணமாக நிற்கும் ஆன்மாக்களையும் பந்தப்படுத்த முடியாமற் போகிறது.

5. அநாதியிலேயே ஆன்மாக்கள் ஏன் இறைவனைப் பற்றவில்லை? உயிர்கள் தம் எளிய இயல்பால் அப்பொழுது இறைவனைப் பற்றும் உணர்வு பெறவில்லை. அநுபவத்தாலேயே உணர்வுபெறும் எளிய இயல்பு வாய்ந்த உயிர்களின் அறிவு, அநாதியில் அந்த உணர்வு பெறாததில் வியப்பொன்றும் இல்லை. அநுபவம் இல்லாத நிலையில் உயிர்களின் எளிய அறிவிற்கு இறைவனைப் பற்றுதல் அருமையாகவும், ஆணவமலத்தைப் பற்றுதல் எளிதாகவும் இருக்கும் என்பதைச் சொல்லவேண்டுவதில்லை. அதனால்தான் உயிர்களின் இயல்புகளுக்கேற்றவாறு பற்றுதற்கு எளிதாக இருக்கும் மாயா கருவிகளை முதலில் படைத்தளித்து அநுபவ உணர்வுபெறச் செய்கிறான். அநுபவ உணர்வு ஏற ஏற, சுவை பற்றும் பொருட்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்கின்றன. அநுபவ முதிர்ச்சியில் அவைகளுக்கு இறைவனைப் பற்றும் வேட்கை மீதூர்கிறது. அவ்வேட்கையை அறிந்த இறைவன் திருவருளே கண்ணாகக் கொண்டு அவை தன்னை அறிந்து, பற்றும்படி செய்கிறான்.

6. இறைவன் அநாதியிலேயே தன்னைப் பற்றும்படியான உணர்வை உயிர்களுக்கு அளிக்கமுடியாதா?

அநுபவத்தாலேயே உணர்வுபெறும் தன்மை வாய்ந்த உயிர்களுக்கு அநுபவத்தின் மூலம்தான் உணர்வுவரச் செய்யலாம். வலிந்து உணர்வுவரச் செய்யவேண்டுமென்றால் உயிர்களின் அறிவு, இச்சை, செயல்களை மாற்றியாக வேண்டும். அங்ஙனம் செய்தால் அவை அழிந்து போகும் என்பதை

மேலே விளக்கியிருக்கிறோம். உயிர்களின் இயல்பை அறிந்தே இறைவன் துணைசெய்ய வேண்டியதிருக்கிறது.

7. உயிர்கள் அறிவுடைப் பொருள்கள் என்று கூறப் படும் பொழுது, அநுபவத்தான் அவை உணர்வுபெறும் என் பது எங்ஙனம் பொருந்தும்?

உயிர்கள் அறிவுடைப் பொருள்களாக இருப்பதா லேயே அநுபவத்தால் உணர்வு பெறுகின்றன. அறிவு இருந்தால்தான் அநுபவ உணர்வு பெறலாம். கல், மண் முதலியவைகளுக்கு அறிவில்லாமையால், அவை எந்த அநுபவ உணர்வும் பெறுவதில்லை. தனக்கு நிலைபே றான இன்பத்தை அளிப்பது எந்தப் பொருள் என்பதை உயிர், பல பொருள்களையும் பற்றிப் பற்றி அநுபவத்தா லேயே தெளியவேண்டியதிருக்கிறது. இறைவனொருவனே அநுபவம் இன்றி எதனையும் உணரவல்லவன்.

8. உயிர்களின் துன்பங்களுக்கு அநுபவமின்மை காரணமா? ஆணவமலம் காரணமா? உயிர்கள் தமக்கு நிலைபேறான இன்பம் அளிக்கும் பொருளை அநுபவத்தாலேயே தெளிய வேண்டிய திருப்பதால், அநுபவமின்மை அவை இன்பப் பேற்றை அநுபவிக்க முடியாமைக்குக் காரண மாகுமே அன்றித் துன்பத்தை அநுபவிப்பதற்கு அது காரண மாகாது. துன்பங்களுக் கெல்லாம் ஆணவமலமே காரண மாகும். அறிவுடைப் பொருளாகிய உயிர் அறியாமை எய்தியது ஆணவமலத்தால் ஏற்பட்ட முதல் துன்பமாகும். உணர்வின்றிக் கிடத்தலால் அது துன்பமாகாதே? எனக் கேட்கலாம். மயக்கமுற்றுக் கிடப்பவன் எவ்வித உணர்வு மின்றித் தான் இருக்கிறான்; இருந்தாலும் நாம் ஏன் அவனுக்கு உதவி செய்ய விரைந்து செல்கிறோம்? உணர் வின்மையும் ஒரு துன்பமே யாதலால்தான் நாம் விரைந்து சென்று, மூர்ச்சை தெளிவித்து, உணர்வு வரச் செய்கிறோம். ஆகவே உயிர்கள் ஆணவமலத்தால் உணர் விழந்தது துன்பமேயாகும். இறைவன், தன்னைப்பற்றும் உணர்வு பெறவில்லையே என்பதற்காக உயிர்களுக்குத் துன்ப அநுபவங்களை ஊட்டவில்லை. உணர்விழந்து கிடக்கும் உயிர்

களின் துன்பங்கண்டு இரங்கி அவை உணர்வு பெறுமாறு, பற்றுதற்கு எளிதாயுள்ள மாயாகருவிகளைப் படைத்தளிக்கிருன். அக்கருவிகளின் துணைகொண்டு உயிர்கள் சிறுகச் சிறுக உணர்வு பெற்று முன்னேறுகின்றன ; ஆனல் அப்பொழுதும் ஆணவமல மறைப்பின் காரணமாகத் தவறுகள் செய்து துன்பமுறுகின்றன. அத்துன்ப அநுபவங்கள் மேன்மேலும் அவற்றின் உணர்வை எழுப்பி மலபந்தத்தினின்றும் அவை விடுபடுமாறு உதவுவதால், இறைவனைக் குறை சொல்வதற்கு இடமில்லை. எனவே துன்பத்திற்கெல்லாம் ஆணவமல சேட்டையே காரணமாகும்.

9. இறைவனல் ஆணவமலபந்தத்தினின்றும் உயிர்களை உடனே விடுவிக்க முடியாதா ? உயிர்களின் எளிய இயல்பை மாற்றி அவைகளுக்குப் புதிய அறிவு, இச்சை, செயல்கள் உண்டாகுமாறு செய்தால்தான் உடனே ஆணவமல மறைப்பினின்றும் விடுவிக்கலாம். அங்ஙனம் செய்தால் அவற்றின் கதி என்னகும் என்பதை முன்னே விவரித்திருக்கிறேம். இயல்பை மாற்றுமலே செய்ய முடியாதோ ? எனக் கேட்கலாம். உயிர்கள் தம் எளிய இயல்பாலேயே ஆணவ மலத்தைப் பற்றி நிற்கின்றன. அநுபவத்தின் மூலம் உணர்வு பெறுவது அவ்வெளிய இயல்புகளுள் ஒன்று. எனவே அநுபவம் ஏற்படுமாறு செய்து தான் ஆணவமலப் பற்றை ஒழிக்கலாமே அன்றி, உடனே ஒழிக்க வேண்டுமென்றல், இயல்பை மாற்றியே தீரவேண்டும்.

10. " உயிர்களுக்குத் தனித்து நிற்கும் சுதந்தரமில்லை; இறைவன் உணர்த்தினல் தான் அவை உணரும் ; அவனே அறிகின்றுன் ; அவனே அறிவிக்கின்றுன் " என்றெல்லாம் சைவ சித்தாந்தம் கூறுகிறதே ? அங்ஙனமானல் இறைவன் என்ன வேண்டுமானலும் செய்யலாம் தானே ? ஈண்டு உயிர்களின் இயல்புகளுக்கேற்றவாறே இன்றவன் துணை செய்யமுடியும் எனக்கூறுவது எங்ஙனம் பொருந்தும் ?

இறைவனை இன்றி உயிர்கள் அமையா என்பதும் அவனை இன்றி அவ்வ விடயியா என்பதும் உண்மை. சடப் பொருள், சித்துப் பொருள் எல்லாமே இறைவன்

துணையின்றி இயங்கமாட்டா. இதனாலேயே " அவனன்றி ஓரணுவும் அசையாது " எனக்கூறுகிறோம். ஆனால் அவன் எங்ஙனம் ஒவ்வோரணுவையும் அசைக்கிறான் என்பதை நாம் நன்கு விளங்கிக் கொள்ளவேண்டும். அந்த, அந்தப் பொருட்களின் இயல்புகளுக் கேற்றவாறே அவன் அசைக்கின்றான். உயிர்கள் அறிவுடைப் பொருட்கள், அவற்றின் அறிவு, இச்சை, செயல்கள் தொழிற்பட வேண்டுமாயின், உடனாக இறைவனின் அறிவு, இச்சை, செயல்கள் ஒன்றாகக் கலந்தும் நின்றும் உபகரிக்கவேண்டும். இல்லையேல் அவை தொழிற் படமாட்டா. ஒன்றாகக் கலந்து உபகரிப்பதைக் " காட்டல் உபகாரம் " அல்லது "அறிவிக்கும் உபகாரம் " என்றும் உடனாக நின்று உபகரிப்பதைக் " காணும் உபகாரம் " அல்லது " அறியும் உபகாரம் " என்றும் கூறுகிறோம். இவ்விருவகை உபகாரங்களையும் இறைவன் செய்யாவிட்டால் உயிர்கள் ஒன்றையும் அறிய முடியாதாதலால், " அவனே அறிகின்றான், அறிவிக்கின்றான் " என்று சொல்கின்றோம். இவ்வுபகாரங்களை இறைவன் செய்கின்றான் என்பதற்குப் பொருள் ஆன்மாக்களுக்குச் சொந்தமான அறிவு, இச்சை, செயல்களை ஒழித்துவிட்டு அவ்விடத்தில் தன்னுடைய அறிவு, இச்சை, செயல்களை நிலைநாட்டுகிறான் என்பதன்று. உயிர்களின் அறிவு, இச்சை, செயல்களுக்கு இறைவன் பூரணமான பாதுகாப்பளிக்கின்றான் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. தன்னை இன்றி அவை இயங்கமாட்டா என்பதற்காகவே அவைகளுக்குத் துணைசெய்கின்றானே அன்றி அவற்றின் அறிவு, இச்சை, செயல்களை அழித்து விடுவதற்காக அன்று. எனவே ஒவ்வோர் உயிரோடும் அவ்வவ்வுயிரேயாய் நின்று இறைவன் இருவகை உபகாரங்களையும் செய்துவருகின்றான். இதனால் தான் எல்லா உயிர்களும் ஒன்றுபோல் அறியாமல், ஒவ்வொன்றும் அதனதன் இயல்புக்கும் அநுபவத்துக்கும் தக்கவாறு அறிகிறது. இறைவனே அறிந்தும், அவனே அறிவித்தும் பாவ, புண்ணியமாகிய வினைப்பயன்கள் இறைவனைச் சாராமல் உயிர்களைச் சார்கின்றமைக்கு என்ன காரணம் என்பதைச் சிந்தித்தால் இதன் நுட்பம் விளங்கும்.

சிவஞான முனிவர் இதனைப் பின்வருமாறு மிகத் தெளிவாக விளக்குகிருர் :—

“ பெத்தத்தில் அவனிவனய் நின்றுவிடயித்தலின் விடயங்கள் அவனுக்கன்றி இவனுக்காயின ” (சிஞான போதச் சிற்றுரை, பதினோராம் சூத்திரம், க - ம் அதிகரண உரை.)

“ அவனிவனய் நின்றுவிடயித்தல்” என்பது இறைவன் உயிராக நின்று அறிவதாகும். இறைவன் உயிராக நின்று அறிவதாலேயே பாவ, புண்ணியமாகிய வினைப்பயன்கள் இறைவனைச் சாராது உயிரைச் சார்கின்றன. நன்மை தருவதற்கு ஏதுவாக உயிர்களின் அறிவு, இச்சை, செயல்கள் நிகழும் காலத்தும் இறைவனுடைய அறிவு, இச்சை, செயல்கள் உடன் நிகழும் ; தீமை தருவதற்கு ஏதுவாக அவை நிகழும் போதும் இறைவனின் உபகாரம் உடன் நிகழும். நன்மை, தீமை இரண்டிற்கும் இறைவனின் உபகாரம் நிகழலாமோ என்ருல், ஆன்மாக்களின் அறிவு, இச்சை, செயல்கள் இயங்குவதற்காகவே அவன் உபகரிக்கின்ருனே அன்றி அவற்றின் இயல்புகளை மாற்றுவதற்காக அன்று. ஆன்மாக்கள் ஆணவமல மறைப்பினுக்குத் தக்கவாறு ஒன்றை விரும்பியும் ஒன்றை வெறுத்தும் நிற்குமாதலால் இறைவன் அவற்றின் போக்கின்படியே இயங்கச் செய்கின்ருன். நன்மை தருவதற்கு ஏதுவாக நிகழும் செயல்களுக்கு மட்டுமே இறைவன் உபகரிப்பதென்ருல், ஆன்மாக்களின் அறிவு, இச்சை, செயல்களைத் தடுத்து நிறுத்தித் தன்னுடைய அறிவு, இச்சை, செயல்களைமட்டும் இயங்கச் செய்யவேண்டும் அல்லது அவற்றின் அறிவு, இச்சை, செயல்களை மாற்றி அமைக்கவேண்டும். இறைவனுடைய அறிவு, இச்சை, செயல்கள் மட்டும் இயங்குவதால் உயிர்கள் ஒரு பயனும் அடையமாட்டா ; உயிர்களின் அறிவு, இச்சை, செயல்களை மாற்றினுலோ அவை அழிந்துபோகும் என்பதை முன்னர் விளக்கியிருக்கிருேம். ஆகவே இறைவன் உயிர்கள் இயற்றும் நல்வினை, தீவினை இரண்டிற்குமே துணைநின்று, அவ்வினைகளின் பயனுகவரும் இன்ப, துன்ப அநுபவங்களை ஊட்டி-

உணர்வு வரச் செய்கின்றான். இறைவனின் அருட்சத்தியே திரோதான சத்தியாக நின்று மலங்களை முதிர்விக்கிறது எனக் கூறப்படுவதின் நுட்பம் இதுவேயாகும். அநுபவத்தின் மூலம் உணர்வு பெறுதல் அறிவுடைப் பொருட்களாகிய உயிர்களுக்கு இயல்பாதலால், இன்ப, துன்ப அநுபவங்களை ஊட்டி அவைகளுக்கு உணர்வு வரச் செய்தலே ஏற்ற உபகாரமாகும். ஆகவே "அவனே அறிகின்றான்; அறிவிக்கின்றான்" எனக் கூறுவது உயிர்களின் இயல்புகளுக்கேற்றவாறே இறைவன் உணர்த்துகிறான் என்பதற்கு முரணன்று என்பது இனிது விளங்கும்.

11. ஆணவமலம் என்னும் பொருளையே இல்லாமற் செய்துவிட்டால் இவ்வளவு தொல்லைகளும் ஒழிந்து போகுமல்லவா? இறைவன் தன் வல்லமையால் ஏன் அங்ஙனம் செய்யக்கூடாது? ஆணவமலம் யாராலும் உண்டாக்கப்படாத அநாதிப்பொருள் என்பதை முன்னர் கூறியிருக்கிறோம். அநாதியாக உள்ள ஒரு பொருள் என்றும் அழியாமல் இருக்கக்கூடிய தன்மை வாய்ந்தது. எனவே அதனை ஏன் இல்லாமற் செய்யக்கூடாது? எனக் கேட்பது, அதனை அநாதியென முன்னர் ஒப்புக்கொண்டதை மறுப்பதாகிறது. (தொடரும்)

---

## சைவ சித்தாந்த மகா சமாஜம்

## 1960-ம் ஆண்டு வருடாந்த மாநாடும் 54-ம் ஆண்டு நிறைவு விழாவும்

சமாஜ வருடாந்த மாநாட்டை இவ்வருடக் கடைசியில் திருக்கேதீஸ்வரத்தில் நடத்துவது சம்பந்தமாய் யாழ்ப்பாணத்தில் முதல் முதல் கூடிய கூட்டத்தில் நன்கு திருப்திகரமாக ஆராய்ந்தோம். நிகழ இருக்கும் மாநாட்டின் வரவேற்புக் குழுச் செயலாளராக யாழ்ப்பாணம் வண்ணார் பண்ணை வைத்தீஸ்வர வித்தியாலயம் அதிபர் திரு. S. அம்பிகைபாகன், B. A. அவர்களைத் தெரிவு செய்து மேற்

கொண்டு நடத்த இருக்கும் கடிதத் தொடர்புகளை அவர் மேற்பார்வையில் விட்டிருக்கின்றோம்.

சமாஜ மாநாட்டை 1960-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 30-ம்௳ சனிக்கிழமையும் 31-ம்௳ ஞாயிற்றுக்கிழமையும் (மறுநாள்)1961-ம் ஆண்டு ஜனவரிமீ 1-ம்௳ திங்கட்கிழமையும் நடத்துவதென நாங்கள் செய்த முடிவு மாநாட்டின் பார்வையாளராக வரவிருப்பவர்களுக்கு ஏற்ற தினங்களாக இருக்குமென்று நம்புகின்றோம்.

மாநாட்டுக்குத் தலைமை தாங்குவதற்கும் சொற்பொழி வாற்றுவதற்கும் பொருத்தமான பெரியார்கள் எவ்வெவர் என்பதுபற்றிச் சமாஜமும் எங்கள் வரவேற்புக் குழுவும் பின்பு ஆலோசனை செய்யலாம்.

இம் மாநாட்டிற்கு வரும் முக்கியஸ்தர்கள், பிரபலஸ்தர்கள், பேச்சாளர்கள, அங்கத்தவர்கள், சமாஜ அலுவலாளர்கள் ஆகிய இவர்கள் சமாஜத்தின் விருந்தினராக உபசரிக்கப்படுவார்கள்.

இந்தியாவில் இருந்து அங்கத்தவரல்லாதார் பார்வையாளர்களாக வருபவர்களிடமிருந்து அவர்களின் மூன்று நான்கு தினங்கள் சாப்பாடு முதலாம் வசதிகளைக் கவனிப்பதற்காக ஒரு சிறு தொகை வசதிக்கட்டணம் அறவிடப்படும். இத் தொகை எவ்வளவு என்பதையும் ஏனைய இதைப்பற்றிய விபரங்களையும் சமாஜமும் வரவேற்புக் குழுவும் கலந்து முடிவு செய்யலாம்.

இந்தியாவில் இருந்து வருபவர்கள் அனைவரும் தத்தமக்குரிய படுக்கை வசதிகளுடன் வருவது விரும்பத்தக்கது. ஏனெனில் இவ்விடம் அண்மையில் ஆலயத்திற்குரிய மடங்களைத் தவிர, ஹோட்டல்களோ வாடகை வீடு(Rest House) களோ கிடையாது. மன்னாரில் ஒரு வாடகை வீடு இருக்கிறது. அங்கு ஆங்கிலேய நாகரிக முறையில் தங்கவும் சாப்பாடு வசதிகளையும் விரும்பினால் குடும்பத்துடன் வரும் இரண்டொரு குடும்பங்கள் மட்டும் அங்குத் தங்கலாம். வேறு வாடகை வீடுகள் (Rest House) 50 மைல்களுக்கு அப்பால்தான் இருக்கின்றது. திருக்கேதீஸ்வரத்தில் இருந்து

6 மைலில் மன்னர் இருக்கின்றது. அங்குப் புகையிரத நிலையமும் இருக்கின்றது. திருக்கேதீஸ்வரத்தில் ஒரு உப தபால் நிலையம் தொலைபேசி வசதிகளுடன் இருக்கின்றது.

மாநாடு நடக்கும் காலத்துச் சீதோஷ்ணநிலை ஏறக் குறைய இராமேஸ்வரத்தின் சீதோஷ்ண நிலையைப் போன்றதே. பொதுவாகச் சொல்லப்போனுல் அக்காலத்தில் தென் இந்திய சீதோஷ்ண நிலை எத்தகையதோ அதைப்போன்றதே. பிரசாரம் சம்பந்தமாய் அண்மையில் இலங்கையில் நடைபெற இருக்கும் (யூலாய் 20ல்) பொதுத் தேர்தல் முடிவடைந்ததும் வேண்டிய ஒழுங்குகளைக் கவனிக்கலாம். 'சித்தாந்தம்' சஞ்சிகையின் ஆகஸ்டுக் கடைசி வெளியீட்டில் அல்லது செப்டம்பர் முதல் வெளியீட்டில் சகல விபரங்களையும் அடக்கி விரிவான பிரசாரங்களை ஆரம்பிக்கலாம்.

அவ்விடமிருந்து வர விருப்பவர்களுக்குரிய விசேட விசா, சம்பந்த ஒழுங்குகளை இவ்விடம் வரவேற்புக்குழு கவனித்து ஆவன செய்யும்.

இந்தியாவில் இருந்து முக்கியமாக ஓதுவாமூர்த்தி ஒருவரும், பக்கவாத்தியம் சகிதம் இருதினங்கள் கதாகாலக்ஷேபம் செய்வதற்குத் திறமையானவர் ஒருவரும் வரவழைக்க வேண்டும். இதுசம்பந்தமான செலவை வரவேற்புக் குழு ஏற்பதுடன் இலங்கையில் உள்ள சிறந்த பக்கவாத்தியக்காரர்களையும் ஒழுங்கு செய்பலாம்.

பெண்கள் பகுதிக்காக மாதர் வரவேற்புக் குழுவும் நியமிக்கப்பட்டுள்ளது. அதற்குத் தலைவியாக யாழ்ப்பாண மாவட்ட அரசாங்க அதிபர் திரு ஸ்ரீகாந்தா அவர்களின் பாரியார் கடமையாற்ற ஏற்றுக்கொண்டார்.

இங்ஙனம்: தங்களன்புள்ள

க. வைத்தியநாதன், வரவேற்புக்குழுத் தலைவர்,

"Senthril", No. 1, Pedris Road, Colpetty, Colombo-3

---

குறிப்பு :—மாநாட்டில் கலந்துகொள்ள விரும்புவோர் சமாஜக் காரியாலயம் 14, வாரன் ரோட், மயிலாப்பூர், சென்னை-4 என்ற முகவரிக்குத் தெரிவித்துக்கொள்ள வேண்டுகிறேன்.—செயலாளர்.

# SAIVA MISSION

Islamic people and Christians have their last resting places—the grave yard, beside their places of worship. Probably they unconsciously feel more than the Saivas that their grave yard is the place where God lives. "கோவில் சுடுகாடு"

Swami Vivekananda said that the Islam was spreading like wild fire in Africa. As for Christians, this goes without saying.

Saivas cannot follow the above people. But they can do some service for the bodies that once were dwelling places of the Eternal pasams (பாசம்).

The present (மதப்பிரசாரம்) religious propaganda is the outcome of the thoughts of some good great Saivas of the former days. From their thoughts the present Saivas have come to words and are now beginning to plunge into actions.

This was the process of the Indian National Congress. It got the independence to India by thoughts first, then words (passing Resolutions) and finally by deeds (by Gandhi Adigal).

There are very many good, highly educated and rich people who are members of the Saiva Siddhanta Mahasamajam. They are giving wonderful talks on Saiva Siddhantam. There are also clear signs of their entering into the field of action.

After 55 years of existence of the Mahasamajam the membership is only about 600 while the membership fees are negligible.

The Saiva books contain many miracles that have been performed by the ancients; but now it cannot be done. Still the Mahasamajam with the blessings of the Lord Siva can acquire the help of the "Almighty dollars" which are the eternal pasams (பாசம்). Therefore it may be right to court the beneficient aspect of the eternal pasams and improve the finance. This will help the Mahasamajam to do some Good Works. For instance some friends by their activities have given the

people the first useful Indian Bank. These people also see the results of their energy in the stupendous works of the Ramakrishna Mission. There are more than 4000 boys and girls in the Ramakrishna Mission schools in Thyagarayanagar alone. Likewise the great 'Appa's Walajabad Hindu Religious School' is flourishing.

Heads of Saiva Mutts may kindly be pleased to help the Mahasamajam and make it as one of their important limbs.

The religious propaganda (மதப்பிரசாரம்) will do real service if it goes to the people and Chant Thavaram etc. by the side of the sick and the dying. In case of death a small group of paid Samajam people must go to the bereaved people and perform some set of simple rituals for the departed.

The same may be done in marriages also with simple rituals suitable for the occasion.

For the present the people, even the educated ones are burdened with obsolete customs, rituals and superstitions many of which are foreign to the Tamils. If the Mahasamajam helps in removing this mighty crushing curse there will be a real miracle. The erudite and the revered members of the Mahasamajam may have the needful reforms in their fingers' ends. This work may not be Himalayan to them.

"Go and worship God in the poor;
You have worshiped Him in the Temples
long enough." —*Sadhu Vasvani.*

---

Note:—Written by and printed at the cost of, a new member of the Samajam who got interested in Saiva Siddhantam by reading Sivagnanabodham, the twelve Sutras alone. He has a vast reading of English books on various religions. He is surprised to have found a treasure in Sivagnanabotham and felt very much not to have known such a cult for the past seventy years of his age. His idea is that there may be so many like him who must be given light to read and to know the treasures of Saiva Siddhantham.

—M. P. Thyagarajan, Asst. Secretary.

திரு. எஸ். பக்கிரி செட்டியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். திரு. ந. மு. கோவிந்தராச நாட்டார் பி.ஏ.,எல்.டி. அவர்கள் பாராட்டுரை வழங்கிச் சிறப்பித்தார்கள்.

கூட்டுப் பிரார்த்தனை : கொழும்பு ஜிந்துப்பட்டி ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமி கோயிலில் வழக்கம் போல், ஜூலை மாதம் ஞாயிற்றுக்கிழமை தோறும் முறைப்படி நிகழ்ந்தது. திரு. வி. எஸ். கணேசசுந்தரம், கம்பளை திரு. சோ. செல்லையா குருக்கள், திரு. இராஜாராம், திரு. சரவணமுத்து, திரு. ஆறுமுகம், திரு. ச. ஈஸ்வரசர்மா, திரு. கே. வி. கணபதி, திரு. கே. பி. ஹரன் ஆகிய அறிஞர் பெருமக்கள் கலந்துகொண்டு சிறப்பித்தனர். தட்சிணத்தார் வேளாளர் மகமைப் பரிபாலன சங்கத்தாரின் சமயத் தொண்டுகள் சாலவும் புகழ்ந்து போற்றற்பாலன.

சுந்தரர் திருநாள் : நமது சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் சார்பில் 31-7-1960 ஞாயிறன்று மாலை 6½ மணிக்கு மயிலைக் கபாலீச்சுரத்தில் மிகவும் சிறப்புறக் கொண்டாடப் பெற்றது. திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார் எம்.ஏ. அவர்கள் தலைமையில், திருக்கோயில் ஆசிரியர் ஜி. கலியாணம் பிள்ளை எம் ஏ. அவர்களும், திருவள்ளுவரகம் ப. இராமநாத பிள்ளை அவர்களும் சுந்தரரைப் பற்றியும், அவர்தம் பாடலின் நயங்களைப் பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள். சமாஜச் செயலாளர் திரு. கி. இராமலிங்கனார் எம்.ஏ. அவர்கள் நன்றியுரை வழங்கினார்கள். அதற்கு முன் மாலை 5 மணி முதல் 6½ வரை சமாஜச் செயற்குழுக் கூட்டம் நடைபெற்றது. அதுபோது இவ்வாண்டின் சமாஜ மாநாடு இலங்கையில் கூடுவதைக் குறித்து வந்த கடிதம் வாசிக்கப் பெற்றது. அதன் சுருக்கம் வேறோர் இடத்தில் இவ்விதழில் வெளியிடப் பெற்றுள்ளது.

சுந்தரர் திருநாள் : ஆர்க்காடு ஸ்ரீ கண்ணன் திருச்சபையின் சார்பில் 31-7-60 ஞாயிறன்று, சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை பி.ஏ., எல்.டி. அவர்கள் தலைமையில், சிறப்புற நடைபெற்றது. திரு. மாணிக்க உடையார் அவர்கள் தமிழ்மறை ஓதினார்கள். வல்லம் மகாவித்வான் திரு. வைத்தியலிங்கம் பிள்ளை அவர்கள் "சுந்தரரும் வள்ளலாரும்" என்பது பற்றியும், வித்துவான் திருமதி கமலவதனி அம்மையார் அவர்கள் மங்கையர்க்கரசியார் என்பது பற்றியும் பேசினார்கள். திரு. கா. மு. சுந்தர உடையார் அவர்கள் நன்றியுரை கூறினார்கள்.

மாதாந்தர வழிபாட்டுக் கூட்டம் : சென்னை தியாகராய நகர்த் தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையத்தின் சார்பில்

7-8-50 ஞாயிறன்று மாலை, செங்கற்பட்டுக்கு அடுத்த திருவிடைச்சுரம் திருப்போரூர் என்னும் இரண்டு தலங்களிலும் நன்கினிது சிறப்புற நிகழ்ந்தது. திருவாளர்கள் சைவப் பெரியார் ச. சச்சிதானந்தம் பிள்ளை, அ. சோமசுந்தரஞ் செட்டியார், நல். முருகேச முதலியார், காஞ்சிபுரம் க. வச்சிரவேல் முதலியார், ச. சிவகுமார், புலவர் முருகவேள், சாரதி பிலிம்ஸ் இராமமூர்த்தி, டைரக்டர் சோமு, மேயர் கம்பெனி மாசிலாமணி முதலியார், காண்ட்ராக்டர் மாசிலாமணி முதலியார், மயிலை டி. மாணிக்கஞ் செட்டியார், நே. த. கிருஷ்ணசாமி முதலியார், கயப்பாக்கம் சோமசுந்தரஞ் செட்டியார், குடந்தை எஸ். டி. பாலு முதலிய பெருமக்களும், தாய்மார்கள் பலரும், சைவ சித்தாந்த மகாசமாஜம், இராயப்பேட்டை ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜன சபை, இராயபுரம் இறைபணிக் கழகம் முதலிய சமய சபைகளின் அன்பர்களும் திரளாகக் கலந்துகொண்டனர். திருப்போரூரில் முருகன் செந்தமிழ்க் கழகச் சார்பில் சமயப் பிரசாரப் பேரவை நிகழ்ந்தது. திருப்போரூர் ஸ்ரீலஸ்ரீ சிவராமசிதம்பர சுவாமிகள் அனைவரையும் வரவேற்று வழிபாட்டைச் சிறப்புற நடத்திக் கொடுத்தார்கள். ஸ்ரீலஸ்ரீ வித்வான் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் சமயப் பேரவைக்குத் தலைமை தாங்கி இனியதொரு சொற்பொழிவு நிகழ்த்தி அனைவர்க்கும் நன்றியுரையும் வாழ்த்துரையும் வழங்கியருளினார்.

---

**பிரிவாற்றாமை:** நமது சமாஜப் பேரன்பரும், சிறந்த சைவசீலரும், பெருஞ்செல்வரும் ஆகிய திருவெண்ணெய் நல்லூர்ச் சின்னசாமி ரெட்டியார் அவர்கள், 6–8–60 சனியன்று இரவு 9–15 மணிக்கு இயற்கை எய்தியமை அறிந்து மிகவும் வருந்துகின்றோம். அருங்கலை விநோதராய், "கற்றவர் நற்றுணை, உற்றவர்க்கு ஊருணி, யாவர்க்கும் ஊதியம்" என்னும் நிலையில் விளங்கியிருந்த அப்பெருமகனாரின் மறைவு, சைவ உலகத்திற்குப் பெரிய இழப்பாகும். அவர்தம் ஆருயிர் அம்பலவாணர் திருவடிக்கீழ் வைகி, அருளின்ப அமைதியில் திளைப்பதாக!

---

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.